# திருப்புகழமிர்தம்





ஆசிரியர்

## கிருபானந்தவாரி

சௌமிய — வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித — ஆடி
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

# புதிய வெளியீடுகள்

**1. கட்டுரைக் கனிகள்**

பல ஆண்டுகளாக நமது திருப்புகழமிர்தத்தில் வெளிவந்துள்ள முக்கியமான 67 கட்டுரைகளின் தொகுப்பு. மிகவும் குறைந்த விலையில் வெளியிடப்பட்டுள்ளது. 420 பக்கங்கள் விலை ரூ. 3—00. பதிவு தபாற் செலவு ரூ. 1—10.

**2. கற்புக் கனிகள்—முதற் புத்தகம்**

கற்பு என்னும் தலைப்பின்கீழ் வெளிவந்த சிறுகதைகள் கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00.

**3. கற்புக் கனிகள்—இரண்டாம் புத்தகம்**

கற்புக் கதைகள் கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00.

## சந்தா நேயர்களுக்கு

திருப்புகழமிர்த இதழ்கள் ஒவ்வொரு ஆங்கில மாதமும் 16ந் தேதி (அன்று விடுமுறையானல் அடுத்துவரும் விடுமுறையில்லாத நாளில்) தபாலில் சேர்க்கப்படும். ஆகவே சந்தாத் தொகைகள் எந்தத் தேதியில் கிடைத்தாலும் அடுத்துவரும் 16ந் தேதி யளவில்தான் திருப்புகழமிர்த இதழ்கள் அனுப்பி வைக்கப்படும்.

பத்திரிகை எந்த மாதமாவது கிடைக்காவிட்டால் அந்த (ஆங்கில) மாதம் 25ந் தேதிவரை பொறுத்துப் பார்த்துவிட்டு அதற்குமேல் எமக்கு எழுதவேண்டும். அதற்கு முன் எழுதப்படும் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டா. ஒரு மாதத்துக்கு மேற்பட்டுத் தெரிவிப்போர் கிரயம் செலுத்திப் பெறவேண்டும்.

பிரதிகள் மாதாமாதம் ஒழுங்காகக் கிடைக்கப்பெருத அன்பர்கள் அந்தந்த வட்ட தபால் மேற்பார்வையாளர்களுக்குப் புகார் எழுதியனுப்பி ஒழுங்கு செய்து கொள்ள வேண்டும். இவ்விடம் தபாலில் சேர்ப்பது வரைதான் எமது பொறுப்பு. தபாலில் தவறும் பிரதிகளுக்கு நாம் பொறுப்பேற்க இயலாது.

பதிலை எதிர்பார்ப்போர் பதிலுக்கு உண்டான கார்டு அல்லது கவர், ஸ்டாம்பு இவைகளையும் சேர்த்தனுப்ப வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

## திருப்புகழமிர்தம் ஆண்டு சந்தா

| | |
|---|---|
| இந்தியா, இலங்கை | ரூ. 3—50 |
| மற்ற நாடுகள் | ரூ. 5—50 |

உ

ஓம் குஹாய நம !



# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 34 | சௌமிய ஞூ—ஆடி மீ ஜூலை 1969 | இதழ் 4

## திருப்புகழ்

### திருவருணை

கனைகடல் வயிறுகு ழம்பி வாய்விட
வடதம னியகிரி கம்ப மாய்நட
கணபண விபரித கந்த காளபு — யங்கராஜன்

கயிறென அமரர நந்த கோடியு
முறைமுறை யமுதுக டைந்த நாளொரு
கதியற வுலகைவி ழுங்கு மேகவொ — ழுங்குபோல

வினைமத கரிகளு மெண்டி சாமுக
கிரிகளு முறுகிட அண்ட கோளகை
வெடிபட எவரையும் விஞ்சி வேலிடு — நஞ்சுபோல

விடுகுழை யளவும ளந்து காமுக
ருயிர்பலி கவர்வுறு பஞ்ச பாதக
விழிவலை மகளிரொ டன்பு கூர்வதொ — ழிந்திடாதோ

முனைபெற வளையஅ ணைந்த மோகர
நிசிசரர் கடகமு றிந்து தூளெழ
முகிலென வுருவமி ருண்ட தாருக — னஞ்சனை

முழுகிய திமிரத ரங்க சாகர
முறையிட இமையவர் தங்க ளூரிபுக
முதுகிரி யுருவமு னிந்த சேவக செம்பொன் மேரு

அனையன கனவித சண்ட கோபுர
அருணையி லுறையும ருந்து ணுமுலை
அபிநவ வனிதைத ருங்கு மாரநெ ருங்குமால்கொண்

டடவியில் வடிவு க ரந்து போயொரு
குறமகள் பிறகுதி ரிந்த காமுக
அரியர பிரமபு ரந்த ராதியர் தம்பிரானே.

## பதவுரை

முனைபெற வளைய அணைந்த=போர்க்களத்தே இடம் பெற்று வளைத்து வந்த, மோகர=போர் ஆரவாரம் செய்த, நிசசரர் கடகம்=அசுரர்களின் சேனை, முறிந்து தூள் எழ=முறிபட்டுப் பொடியாகவும், முகில் என உருவம் இருண்ட தாருகன் அஞ்ச=மேகம்போல் உருவம் கருத்த தாருகாசுரன் அஞ்சுமாறும், மீனம் முழுகிய=மீன்கள் முழுகி உலாவுவதும், திமிரம்=இருண்டதும், தரங்க சாகரம் முறையிட=அலைகள் வீசுவதுமான கடல் கலங்கி முறையிடவும், இமையவர் தங்கள் ஊர் புக=தேவர்கள் தங்கள் நகரம் போய்ச் சேரவும், முதுகிரி உருவ=பழைய கிரவுஞ்சகிரியில் வேல் ஊடுருவிச் செல்லவும், முனிந்த சேவக=கோபித்த வீரரே! செம்பொன் மேரு அனையன=செம்பொன் மேருமலைக்குச் சமான மான, கனவித சண்ட கோபுர=பருத்துள்ள வலிமையான கோபுரங்களையுடைய, அருணையில் உறையும்=திருவண்ணாமலையில் வீற்றிருப்பவளும், மருந்து=அமுதம்போன்றவளும், உணுமுலை=வாய்வைத்து அருந்தாத தனங்களையுடையவளும், அபிநவ வனிதை=என்றும் புதியவளுமாகிய பார்வதியம்மை, தரும் குமார=பெற்ற திருக் குமாரரே! நெருங்குமால் கொண்டு=மிகுந்த விருப்பங்கொண்டு, அடவியில்=கானகத்தில், வடிவு கரந்து போய்=தனது உண்மை யுருவை மறைத்துச் சென்று, ஒரு குறமகள் பிறகு திரிந்த காமுக= ஒரு குறப் பெண்ணின் பின்னே திரிந்த காமுகரே! அரிஅர பிரம புரந்தர ஆதியர்=திருமால், உருத்திரன் பிரமன், இந்திரன் முதலிய தேவர்கட்கும், தம்பிரானே=தனிப் பெருந்தலைவரே! கனைகடல்= ஒலிக்கின்ற கடலின், வயிறு குழம்பி வாய்விட=உட்புறம் குழம்பி ஓ என்று ஓசை செய்ய, வட தமனிய கிரி=வடக்கில் உள்ள பொன் மேருகிரியை, கம்பமாய் நட=மத்தாக நட்டு, கணபண=கூட்ட மான படங்களையுடையதும், விபரித=அதிசயிக்கத்தக்க, கந்த

காள=நாற்றமுடைய நஞ்சையுடையதுமான, புயங்கராஜன் கயிறு என=பாம்பரசனாகிய ஆதிசேடனை கயிறாகக் கொண்டு, அமரர் அநந்த கோடியும்=தேவர்கள் பலகோடி பேர் கூடி, முறை முறை அமுது கடைந்த நாள்=வரிசை வரிசையாக அமுதம் கடைந்த நாளில், ஒரு கதி அற=பிழைக்கும் வழி என்றும் இல்லாத வகையில், உலகை விழுங்கும்=உலகையே விழுங்கும்படி வந்த, மேக ஒழுங்கு போல= மேகத்தின் வரிசை போல் எழுந்து, வினை மத கரிகளும்=செயலாற்றும் எட்டுத் திசையானைகளும், எண் திசாமுக கிரிகளும்=எட்டுத் திசைகளில் உள்ள மலைகளும், முறுகிட=சூடேறிக் கருநிறங் கொள்ளும்படி, அண்ட கோளகை வெடிபட=அண்ட உருண்டை வெடிபட, எவரையும் விஞ்சி=யாரையும் மேலிட்டு, வேல் இடு=வேல் போலப் பரந்து வந்த, நஞ்சுபோல=ஆலாலவிடம் போல, விடு குழை அளவும் அளந்து=தொங்கும் குழை வரையிலும் நீண்டு, காமுகர் உயிர் பலி கவர் உறு=காமங் கொண்டவர்களின் உயிரையுண்ணக் கவர்வதும், பஞ்சபாதக=ஐந்து பெரும் பாவங்கட்கும் இடந்தருவதுமான, விழி வலை மகளிரொடு=கண் என்னும் வலையையுடைய பொது மாதர்கள் மீது, அன்பு கூர்வது=காதல் மிகுதியாகக் கொள்ளும் தன்மை, ஒழிந்திடாதோ=அடியேனை விட்டு விலகாதோ?

## பொழிப்புரை

ஆரவாரஞ்செய்து போர்க்களத்தில் வளைத்து வந்த அசுரர்களின் சேனை அழிந்து பொடிபடுமாறும், மேகம்போன்ற கரிய உருவமுடைய தாருகாசுரன் அச்சங் கொள்ளுமாறும், மீன்கள் உலாவுவதும், இருண்டதும், அலை வீசுவதுமாகிய கடல் கதறுமாறும், தேவர்கள் தங்கள் நகரில் குடிபுகுமாறும்; பழமையான கிரவுஞ்சகிரியில் வேலாயுதம் ஊடுருவிச் செல்லுமாறும் கோபித்த வீர மூர்த்தியே! செம்பொன் மேருமலையையொத்ததும் பருமையும் வலிமையும் உடையதுமான கோபுரத்துடன் கூடிய திருவண்ணாமலையில் உறைபவளும், அமுதம் போன்றவளும், வாய்வைத்து அருந்தாத தனங்களையுடையவளும், புதியவளுமாகிய பார்வதியம்மை பெற்ற பாலகரே! மிகுந்த அன்புகொண்டு காட்டில் ஒரு குறப்பெண் பின்னே திரிந்த காமுகரே! அயன் அரி அரன் இந்திரன் முதலிய இமையவர்க்கும் தனிப்பெருந் தலைவரே! ஒலிக்கின்ற கடலின் உட்புறம் குழம்பிக் கலக்கமுற்றதால் அக்கடல் ஓவென்று முறையிட, வடக்கேயுள்ள பொன் மேருகிரியைத் தூணாக நட்டு, பல தலைகளையும் அதிசயிக்கத்தக்க நாற்றமுடைய நஞ்சையும் உடைய நாகவேந்தனாகிய ஆதிசேடனைத் தாம்புக்கயிறாகவும் கொண்டு, பலகோடி தேவர்கள் வரிசை வரிசையாக நின்று பாற்கடல்கடைந்த அந்நாளில், பிழைக்கும் வழி ஒன்றும் இல்லாதவகையில் உலகையே விழுங்குமாறு மேகவரிசைபோல்

எழுந்து, செயலாற்றும் மதங்களையுடைய எட்டு யானைகளும், எண் திசைகளிலுள்ள எட்டு மலைகளும் சூடேறிக் கருகுமாறு, அண்டவுருண்டை வெடிபட, யாரையும் மேலிட்டு அடக்கி, வேல்போல் வந்த ஆலால விஷம்போல, தொங்குந்தோடுகள் வரை நீண்டு காமிகளின் உயிரை யுண்பதும், ஐம்பெரும் பாவங்களைச் செய்விப்பதுமான கண் என்ற வலையைக் கொண்ட பொது மாதர்மீது காதல்மிகும் புன்மை அடியேனை விட்டு விலகாதோ?

## விரிவுரை

இத்திருப்புகழில் பொது மாதர்களின் கண் ஆலகால நஞ்சை யனையது என்று அருணகிரிப் பெருமான் கூற வந்தார். அவ்வாறு கூறவந்த அவர் ஆலகால நஞ்சு எப்படித் தோன்றியது, அது எத்துணை வேகமும் கொடுமையும் உடையது என்று விரிவாக வர்ணனை புரிகின்றார்.

**கனைகடல் வயிறு குழம்பி வாய்விட:—**

கனை—ஒலி. ஒலிக்கின்ற கடலின் (வயிறு) உட்புறமானது குழம்பிக் கலங்கி 'ஓ' என்று வாய்விட்டு ஒலிக்குமாறு மேரு மலையைக்கொண்டு கடைந்தார்கள்.

**வட தமனியகிரி கம்பமாய் நட:—**

தமனியம்—பொன். பாற்கடல்கடைய முயன்ற தேவர்கள், கடையும் மத்தாக வடக்கேயுள்ள பொன் மேருகிரியை நாட்டினார்கள்.

**கணபண விடரித கந்தகாள புயங்கராஜன் கயிறெனா:—**

கணம்—கூட்டம்; காளம்—நஞ்சு; புயங்கம்—பாம்பு.

கூட்டமாக உள்ள ஆயிரம் பண மகுடங்களையுடையவன் ஆதிசேடன். அதிசயிக்கத்தக்க நாற்றமுடைய நஞ்சையுடையவன். அரவுகட்கு அரசனாகிய ஆதிசேடனைத் தாம்புக் கயிறாகக் கொண்டு கடல்கடைந்தார்கள்.

"அரியவுடு பதிகடவி யாட கச்சி லம்பொ
டழகுவட மணிமுடிவி யாள பிட்ட முந்த
அமரரொடு பலர்முடுகி ஆழியைக்கடைந்து அமுதாக"
—(இருளளக) திருப்புகழ்.

**அமரர் அநந்தகோடியும் முறைமுறை யமுது கடைந்த நாள்:—**

பலகோடி தேவர்கள் ஒன்றுபட்டு வரிசை வரிசையாக நின்று அமுதத்தை வேண்டித் திருப்பாற்கடலைக் கடைந்தார்

கள். அந்நாளில் அவர்கள் எதிர்பார்த்த அமுதம் தோன்ற வில்லை. அதற்கு நேர்மாருக, ஆதிசேடன் நஞ்சினைக் கக்கினுன்.

கதியற உலகை விழுங்கும்...நஞ்சு:—

உலகம் யாவும் இனிபிழைக்க வழியில்லையென்று கலங்குமாறு உலகையே அழிக்குமாறு எழுந்தது ஆலாலவிடம்.

மேக வொழுங்குபோல:—

அவ்வாறு பிறந்த நஞ்சு கரியமேகத்தின் வரிசைபோல் இருந்தது.

அமுதம்—வெண்மை; நஞ்சு—கருமை. உயர்ந்த பொருள் வெண்மையாகவும், தாழ்ந்த பொருள் கருமையாகவும் இருக்கும். கொடுமையின் நிறம் கருமை. ராகு—கரிய நிறம், இயமன்—கரிய நிறம்; சனி—கரிய நிறம்.

பஞ்சத்தையும் கருப்பு என்பார்கள். மரணத்தை அறிவிக்கும் கடிதத்தில் கருமைக்கோடு இடுவது உலக மரபு;

கருந்தேள், கருநாகம் இவைகள் கொடுமை மிக்கவை. ஆதலால் உலகங்களை அழிக்க வந்த ஆலாலவிடம் மிகக் கருமையாக இருந்தது.

உலகத்தை உய்விக்க எம்பெருமான் கண்ணுதற் கடவுள் அவ்விடத்தைக் கழுத்தில் தரித்தருளினுர். அதனுல் அப்பெருமானுடைய பவளம் போன்ற செம்பொன் மேனியில் கண்டம் மட்டும் கரியதாயிற்று. நீலகண்டராக விளங்கினுர்.

"மிடறு கரியர்" —(திமிரவுததி) திருப்புகழ்.

வினைமத கிரிகளும் எண்டிசாமுக கிரிகளுமுறுகிட:—

ஆலாலவிடத்தின் கொடிய அனல் வேகத்தினுல், செயலாற்றும் திறமுடைய எட்டுத்திசை யானைகளும், எட்டுக்குல மலைகளும், சூடு ஏறிக் கருகிவிட்டது.

அஷ்டகஜங்கள்:—

ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்ப தந்தம், சார்வ பௌமம், சுப்ரதீபம்.

அஷ்டகிரிகள்:—

கைலை, நிடதம், இமயம், ஏமகூடம், மந்தரம், நீலகிரி, விந்தம், கந்தமாதனம்.

**அண்ட கோளகை வெடிபட:—**

கோளம்—உருண்டை. உருண்டை வடிவமான அண்டம் வெடித்தது. அண்டம்—முட்டை. உலகம் உருண்டை வடிவு என்று அன்றே கண்ட ஆன்ருேர்கள் அதற்கு அண்டம் என்றே பேரிட்டார்கள்.

நஞ்சின் வேகத்தால் அண்ட கோளகை வெடித்து விட்டது.

**எவரையும் விஞ்சி:—**

விஞ்சுதல்—மேற்படுதல்.

அக்கொடிய விடத்தின் அருகில் சென்றவுடன் திருமாலின் திருமேனி கருமேனியாயிற்று. பிரமன், இந்திரன், அக்கினி, வாயு முதலிய தேவர்கள் யாவரையும் திடுக்கிடச் செய்து விடம் மேற்பட்டது.

"விடை பரவி யயன் மாலொ
டமரர்முனி கண மோட
மிடறடைய விடம் வாரி யருள்நாதன்"
—(சுடரணைய) திருப்புகழ்.

**வேலிடு நஞ்சுபோல:—**

"வேலைப்போன்ற உக்கிரமுள்ளது ஆலகாலவிடம். அந்த ஆலகால விடம்போன்றது. பொது மாதர்களின் கண்கள்" என்று இத்தனை வித்தாரமாக அடிகளார் கூறுகின்ருர். விலை மகளிரது கண்கள் அத்துணைக் கொடுமை யுடையது.

**விடுகுழை யளவு மளந்து:—**

காதில் தொங்குகின்ற குழையை எட்டிப் பிடிப்பதுபோல் நீண்ட கண்கள்.

**காமுகர் உயிர்பலிகவர் வுறும்:—**

காமிகளின் உயிரை யுணவாகக் கவர்ந்து உண்ணும் வலிமையுள்ளவை அக்கண்கள்.

பலி—உணவு.

**பஞ்சபாதக விழி:—**

ஐம்பெரும் பாவங்கட்கும் உறைவிடமானவை அக்கண்கள்.

ஐம்பெரும் பாவங்கள்; கள், காமம், கொலை, களவு, பொய்.

**விழிமலை மகளிரொ டன்புகூர் வதொழிந்திடாதோ ?**

"இத்தகைய கொடுமை வாய்ந்த கண்ணுகிய வலையை வீசி ஆண்களாகிய மீன்களைப் பிடிக்கும் அம்மாதர்மீது அன்பு அதிகம் வைக்கும் புன்மை அடியேனைவிட்டு விலகாதோ?", என்று இறைவனிடம் வேண்டுகின்ருர். கூர்ந்தல்—மிகுதிப் படுதல்.

**முனைபெற வளைய அணைந்த:—**

முனை—போர்.

"முனைமுகத்து நில்லேல்" ஆத்திச்சூடி.

போர்க்களத்தில் வளைத்து வந்த சேனைகள்.

**மோகரம்:—**

போரின் ஆரவாரம்.

"மோகரதுந்துபி ஆர்ப்ப" —(மேகமெனும்) திருப்புகழ்.

**நிசிசரர் கடகமுறிந்து தூள்பட:—**

நிசி—இரவு, சரர்—உலாவுபவர்.
இரவில் சஞ்சரிப்பதனுல் அசுரர் நிசிசரர் எனப்பட்டனர்.
கடகம்—சேனை.

"நேரணியிட்டு வளைந்த கடகம் நெளிந்தது"

—கந்தரலங்காரம் (3)

முருகப் பெருமான் சீறியதனுல் அசுரர்களின் சேனை அழிந்து துகளாகியது.

**முகிலென உருவ மிருண்ட தாருகனஞ்ச:—**

தாரகாசுரன் என்பவன் யானைமுக முடையவன். மாயையில் பெரிதும் வல்லவன். திருமால் ஏவிய சக்கரத்தை மாலையாகக் கழுத்தில் ஏற்றவன். சூரபன்மனுடைய இளைய சகோதரன்.

இவன் மிகவும் மேகம்போல் கரியநிறம் படைத்தவன். முருகவேளின் சீற்றங்கண்டு அஞ்சினுன்.

**மீன முருகிய திமிர தரங்க சாகரமுறையிட்ட:—**

சாகரம்—கடல். சகரர்கள் தோன்றியதால் கடல்சாகரம் எனப் பேர் பெற்றது.

திமிரம்—இருள்.

இருண்ட நிறம் உடையது. கருநிறம் ஆழத்தால் தோன்றுவது.

தரங்கம்—அலை.

அலைகள் ஒழியாமல் வீசிக் கொண்டிருப்பது. மீன்கள் நிரம்ப வாழக் கூடியது. இத்தகைய ஆழ்கடல் 'ஓ' என்று முறையிட்டது.

**இமையவர் தங்களூர்புக:—**

நெடுங்காலமாக அமரர்கள் பொன்னுலகைக் கைவிட்டு சூராதி யவுணர்களிடம் அலைந்து உலைந்து திரிந்தார்கள். முருகன் கருணையால் இமையவர்கள் திரும்பவும் தங்கள் நகரில் குடியேறினார்கள்;

"இமையவர் நாட்டினில் நிறைகுடியேற்றிய
எழுகரை நாட்டவர் தம்பிரானே"

—(விரகற) திருப்புகழ்.

**முதுகிரியுருவ முனிந்த சேவகம்:—**

முது—பழமை. பழமையான கிரவுஞ்சகிரியை வேலினால் தொளைத்துச் சீறிய முழுச்சேவகன் முருகன். சேவகன்—ஆற்றல் நிறைந்த வீரன்.

**செம்பொன் மேரு அனையன கனவித கண்ட கோபுரம்:—**

திருவண்ணாமலையில் விளங்கும் திருக்கோபுரம் மேருகிரி போல் உயரமானது.

கனம்—பருமையுடையது; கண்டம்—வலிமையுடையது.

**அருணையினுறையு மருந்து:—**

மருந்து—தேவாமிர்தம். திருவண்ணாமலையில் எழுந்தருளிய உமாதேவியார். அமுதம் போன்றவர்.

"மருந்து வந்தனை யமரருக் கருளியமா யோன்"

—வில்லிபாரதம்.

**உண்ணாமுலை:—**

யாரும் வாய்வைத்து அருந்தாத தனங்களையுடையவர். வடமொழியில் "அபீதகுஜாம்பாள்" என்பர்.

**அபிநவ வனிதை:—**

அபிநவம்—மிகுந்தபுதுமை. என்றும் புதியவளாகக் காட்சிதரும் தேவி.

**அடவியில் வடிவு கரந்து போய்:—**

வள்ளி பிராட்டியாரைப் பக்குவப்படுத்தும் பொருட்டு ஆறு முகம் மாறுமுகமாகச் சென்று அருள்புரிந்தார்.

**அரியர பிரம புரந்தராதியர் தம்பிரானே:—**

அயன், அரி, அரன் முதலிய தேவர்கள் போற்றும் தேவாதி தேவன் முருகன்.

"படைத்தளித்தழிக் குந்த்ரிமூர்த்திகள் தம்பிரானே"
—(கனைத்ததிர்க்கு) திருப்புகழ்.

## கருத்துரை

உண்ணாமுலையம்மையாரது குமாரனே! விலைமகளிரது மோகம் விலக அருள்செய்.

## திருப்புகழ்

இரவியு மதியுந் தெரிவுற எழுமம்
புவிதனி லினமொன் றிடுமாதும்
எழில்புதல் வருமின் றழுதுள முருகும்
மிடர்கொடு நடலம் பலகூறக்

கருகிய வுருவங் கொடுகனல் விழிகொண்
டுயிரினை நமனுங் கருதாமுன்
கலைகொடு பலதுன் பமுமக லிடநின்
சரணிணை கருதும் படிபாராய்

திருமரு வியதிண் புபனயன் விரியெண்
டிசைகிடு கிடவந் திடுசூரன்
திணிபுய மதுசிந் திடஅலை கடலஞ்
சிடவலி யொடுகன் றிடும்வேலா

அருமறை யவரந் தரமுறை பவரன்
புடையவ ருயஅன் றறமேவும்
அரிவையு மொருபங் கிடமுடை யவர்தங்
கருணையி லுறையும் பெருமாளே.

## பதவுரை

திருமருவிய=இலக்குமிதேவி பொருந்தியுள்ள, திண்புயன்= வலிமைமிக்க தோள்களையுடையவராகிய நாராயணரும், அயன்= பிரமதேவனும், விரி எண் திசை=விரிந்துள்ள எட்டுத் திசைகளில் உள்ள அனைவரும், கிடுகிட வந்திடு சூரன்=நடுநடுங்குமாறு வந்த சூரபன்மனுடைய, திணிபுயம் அது சிந்திட=வலிய தோள்கள் அறுபட்டு விழுமாறும், அலைகடல் அஞ்சிட=அலைகளை வீசும் கடல் அஞ்சுமாறும், வலியொடு கன்றிடும் வேலா=வலிமையுடன் சீறிய வேலாயுதத்தை யுடையவரே! அருமறையவர்=அரிய வேதங்களில் வல்ல அந்தணர்களும், அந்தரம் உறைபவர்=வானில் வாழும் தேவர்களும், அன்பு உடையவர் உய=அன்புடைய அடியார்களும் பிழைக்கும் வண்ணம், அன்று அறம் மேவும்=அந்நாள் முப்பத்திரண்டு அறங்களை விரும்பிச் செய்த, அரிவையும்=பார்வதிதேவி, ஒரு பங்கு இடம் உடையவர் தங்கு=இடப்புறத்தில் உறைகின்ற, அருணையில் உறையும்=திருவண்ணாமலையில் வாழுகின்ற, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! இரவியும்=சூரியனும், மதியும்=சந்திரனும், தெரிவு உற எழும் அம்புவிதனில் இனம்=தெரியும்படி தோன்றிவரும் இப் பூதலத்தில் சுற்றத்தவரும், ஒன்றிடு மாதும்=பொருந்தி வாழ்ந்த மனைவியும், எழில் புதல்வரும்=அழகிய மைந்தர்களும், நின்று அழுது=சுற்றி நின்று அழுது, உளம் உருகும் இடர்கொடு=உள்ளம் உருகும்படியான வருத்தத்தைக் கொண்டு, நடலம் பலகூற=துன்ப வார்த்தைகள் பற்பல சொல்ல, கருகிய உருவம் கொடு=கரிய வடிவத்துடனும், கனல் விழிகொண்டு=நெருப்புப் பொறிகள் வீசும் கண்களையும் கொண்டு, நமனும்=கூற்றுவன், உயிரினை கருதாமுன்= அடியேனுடைய உயிரைப் பிடிக்க நினைத்து வருவதற்கு முன்னரேயே, கலைகொடு=கற்ற கல்வியுடன், பல துன்பங்களும் அகலிட= பல வகையான துன்பங்களும் நீங்குமாறு, நின் கழல் இணை கருதும் படி பாராய்=தேவரீருடைய இரு திருவடிகளைத் தியானிக்குமாறு திருக்கண் பார்த்தருளுவீராக.

## பொழிப்புரை

இலக்குமி தேவி பொருந்திய வலிமை மிக்க தோள்களையுடைய திருமாலும், பிரமதேவனும், பரந்த எட்டுத் திசைகளில் உள்ளவர்களும் நடுநடுங்குமாறு போருக்கு வந்த சூரபன்மனுடைய வலிமைமிக்க தோளகள் அறுபட்டு விழுமாறும், அலைகள் வீசும் கடல் அஞ்சுமாறும், வலிமையோடு கோபித்த வேலாயுதத்தை யுடையவரே! அருமையான வேதங்களையோதும் அந்தணர்களும், விண்ணுலகவாசிகளும், அன்பு மிக்க அடியார்களும் உய்யும்படி, அன்று முப்பத்திரண்டு

அறங்களையும் விரும்பிச் செய்த பார்வதியம்மையை இடப் புறத்தில் கொண்ட சிவபிரான் வாழும், திருவண்ணுமலையில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! சூரியனும் சந்திர னும் தெரியும்படி தோன்றிவரும் இப்பூதலத்தில் சுற்றத் தாரும், பொருந்திய மனைவியும், அழகிய புதல்வர்களும், சுற்றி நின்று அழுது, உள்ளம் உருகித் துன்பத்தைக் கொண்டு துயரச் சொற்களைச் சொல்ல, கரியவடிவுடன் நெருப்புப் பொறி கள் சிந்துங்கண்களுடன் இயமன் என்னைக்கருதி வருவதற்கு முன், கற்ற கலைகளும் பல துயரங்களும் நீங்குமாறு, தேவரீ ருடைய இரு திருவடிகளைத் தியானிக்கும்படி அடியேனைக் கடைக் கண்களால் பார்த்தருளுவீராக.

## விரிவுரை

**இரவியுமதியுந் தெரிவுற எழுமம்புவி:—**

பகலில் சூரியனும், இரவில் சந்திரனும் தெரியுமாறு பூமி சுற்றிக் கொண்டிருக்கின்றது.

**இனம்:—**

சுற்றத்தார்கள். மரணத் தருவாயில சுற்றத்தார்கள் சுற்றி நின்று அழுவார்கள். இயமனை எதிர்த்துப் பேசும திறம் இல்லாதவர்கள் என்பது குறிப்பு.

**ஒன்றிடுமாதும்:—**

ஒன்றுதல்—பொருந்துதல். வாழ்வில் பொருந்தியிருந்த மனைவியும் கலங்கி யழுவாள்.

**எழில் புதல்வரும்:—**

அன்புடன் வளர்த்த அழகிய புதல்வர்களும் நின்று பார்த் துத் தேம்பித் தேம்பி யழுவார்கள்.

**உளம் உருகும் இடர்கொடு நடலம்பல கூற:—**

நடலம்—துன்பவுரை. உள்ளம் உருகும் துயரத்தைக் கொண்டு "இனி எங்களுக்கு யார் துணை? எங்களை அவல மாகத் தவிக்கவிட்டுச் சென்றீரே. அந்தோ! இனி உமது மலர் முகத்தை என்று காண்போம்?" என்பனவாதி துன்ப மொழி கூறிப் புலம்புவார்கள்.

**கருகிய வுருவங் கொடுகனல் விழிகொண் டுயிரினை நமனுங் கருதாமுன்:—**

இயமனுடைய வடிவங் கருமையானது. அச்சத்தைத் தருவது. கண்களில் கனல்பொறி பறக்க வந்து இயமன் உயிரைப் பிடித்து இழுத்துச் செல்லுவான். அப்படி இயமன்

வந்து உயிரைப்பற்றுமுன் முருகனுக்கு அடிமையாக வேண்டும்.

**கலைகொடு பல துன்பமு மகலிட:—**

கலைகளும் மிகுதியாகக் கற்பதனால் துன்பத்தையே தரும். அதனால்தான் மணிவாசகர் "கற்பனவும் இனியமையும்" "கல்வியென்னும் பல்கடற் பிழைத்தும்" என்றார்.

எனவே கற்றகலைகளின் துன்பமும், வேறு பல துன்பங் களும் அகலவேண்டும்.

**கழலிணை கருதும்படி பாராய்:—**

முருகன் திருவடியை இடையறாது தியானம் புரிந்தால் எல்லாத் துயரங்களும் விளக்கின்முன் இருள்போல் விலகும்.

துன்பங்கள் அஞ்ஞானத்தால் எய்துகின்றன. ஞானத்தால் துன்பமகன்று இன்பம் எய்துகின்றது. இறைவன் திருவடி ஞானமே யாகும் என உணர்க.

'வள்ளல் தொழு ஞானக் கழலோனே"

—(துள்ளுமத) திருப்புகழ்.

எனவே ஞானமேயாய திருவடியைத் தியானித்தால் அறியாமை விலகும். அதனால் துன்பங்கள் அனைத்தும் தொலைகின்றன. ஆதலால் ஒவ்வொருவரும் எம்பிரானுடைய ஞானத் திருவடியைத் தியானித்துத் துன்பமற்று இன்ப முற்று உய்வார்களாக.

**திருமரு வியதிண்புயன்..............வேலா:—**

மாலும் அயனும் திசை பாலகரும் அஞ்சி நடுங்குமாறு சூரபன்மன் போருக்கு வந்தான். அவனுடைய வலிய மாய உடம்பை வேல் அழித்தது.

**அருமறைய வரந்தர முறைபவ ரன்புடையவருய அன்றறமேவும்:—**

அந்தணர்களும், அமரர்களும், அடியார்களும் உய்யுமாறு அம்பிகை 32 அறங்களையும் விரும்பிச் செய்தருளினர்.

**அரிவையு மொருபங்கிட முடையவர்:—**

உமாதேவியை இடப்புறத்தில் கொண்டவர் சிவபெருமான்.

## கருத்துரை

அருணை மேவும் அண்ணலே! உனது பாதமலரைத் தியானஞ் செய்ய அருள் செய்.

உ
முருகா

# கற்பு

## இருமனைவியரால் இடர்

"கடவுளே! எனக்கு எத்தனைச் செல்வம் இருந்து என்ன பயன்? வீடு முழுவதும் பளிங்குக் கல் பரப்பியுள்ளது. மின்விளக்குகள் சுடர் விடுகின்றன; விலையுயர்ந்த ஆசனங்கள் நிறைந்திருக்கின்றன. வெள்ளிப் பாத்திரங்கள் குவிந்திருக்கின்றன; ஆடைகள் நிறைந்த பீரோக்கள்; அணிகலன்களின் பெட்டிகள்; எல்லாம் இருக்கின்றன. ஆனால் ஒரு குழந்தை தவழ்ந்து அழகு செய்யவில்லையே? வறியவர்கள் வீட்டில் வருஷந் தவறாமல் மகவு பிறக்கின்றது. உண்டிக்கும் உடைக்கும் திதிங்கிணத்தோம் என்று குட்டிக்கரணம் போடுகின்ற வீட்டில் ஏது பெரியது? எது சிறியது? என்று தெரியாத வண்ணம், எவர் சில்வர் அடுக்குபோல் குட்டிகள் உலாவுகின்றன.

மலைபோன்ற செல்வம் படைத்த என் கண் மகிழ ஒரு குழந்தையைத் தரக்கூடாதா? ஐயனே நீ செய்யுந் திருவிளையாடலை யாரால் அளக்க முடியும்? கருணைக்கடலே! என் குலமும் நலமும் தழைக்க ஒரு குழந்தையைக் கொடுத்தருள்" என்று சுப்பராய முதலியார் சதா இறைவனிடம் முறையிட்டு வந்தார்.

கவலையுள்ளவர் அடிக்கடி ஜோதிடம் பார்ப்பது உலக இயல்பு. அதுபோல் கண்ட கண்ட ஜோதிடர்களை நாடி தன் ஜாதகக் குறிப்பைக் கொடுத்துக் கேட்டார். ஒரு ஜோதிடர் கூறியதுபோல் மற்றொரு ஜோதிடர் கூறுவதில்லை.

இரண்டாவது கல்யாணம் புரிந்தால் குழந்தை பிறக்கும் என்று ஒரு ஜோதிட சாஸ்திரிகள் கூறினார். அதை நம்பி மறுதாரம் விவாகம் புரிய முயன்றார்.

அவருக்கு ஒரு குரு இருந்தார். அவர் உயர்ந்த அறிவு நலம் பெற்றவர். அநுபவம் படைத்தவர். அவருடைய பேர் சுகவாரி. அப்பேருக்கு ஏற்ப அவர் பரம சுகமாக இருந்தார். சுகத்துக்குக் காரணம் வேண்டாமையென்ற நிராசையேயாகும்.

"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்"
"வேண்டாமையன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்ப தில்"

என்ற பொய்யாமொழிகளைத் தன் நடைமுறைக்குக் கொணர்ந்தவர் அவர். அதனால் அவர் இன்பமாக வாழ்ந்தார்.

சுகவாரி என்ற குருநாதர் சுப்பராய முதலியாரைப் பார்த்து, "அப்பனே! குழந்தையில்லை யென்ற காரணத்துக்காக மறுதாரம் புரிந்து கொள்வது அறிவுடைமையாகாது. நன்மை தீமை சுகம் துக்கம் பெறுவது இழப்பது ஆகிய அனைத்தும் கருவிலேயே அமைந்தவை. இடையிலே அமைவதன்று. உனக்கு மகப்பேறு இல்லையென்றால் பெருஞ் செல்வம் படைத்த நீ ஒரு கல்லூரி புதுக்குவாயாக. மாணவர்கட்கு இலவச உணவு தருவாயாக. உன் உணவுவுண்டு கலைக்கண் பெற்ற மாணவர்கள் உன் பேரை என்றென்றும் கூறுவார்கள். ஒரு ஏழைக் குழந்தைக்கு கல்விதானம் புரிந்து விட்டால் அவன் வாழ்நாள் முழுதும் உண்டு உடுத்து உவகையுறுவான். அப் புண்ணியம் அவனைப் படிக்க வைத்தவனுக்கு உண்டு. அறிவு தானத்திலும் விஞ்சிய தானமே கிடையாது. தன் வீட்டுக்கு வந்த ஒருவனுக்கு இரண்டு ரூபாய் பெறுமதியான உணவு தருகின்றான் ஒருவன். அவ்வுணவு ஐந்து மணி நேரத்தில் செமித்து விடுகின்றது. ஒரு ரூபாய்க்குச் சிறந்த அறிவு நூலை ஒருவனுக்கு வழங்கினால் மூன்று தலைமுறைக்கு அந்நூல் வழிகாட்டும். பிழைகளுக்கெல்லாம் தலையாய பிழை அறிவு நூலைக் கல்லாததுதான். அதனால் பட்டினத்துச் சுவாமிகள் "கல்லாப் பிழையும்" என்று பாடியருளினார். "அறிவு நூல் கல்லா மூடர்" என்கின்றார் அருணகிரிநாதர். ஆனபடியால் பலவறிய குழந்தைகளைப் படிக்கவை. கற்க வேண்டியதைக் கற்கச் செய். கல்வி ஞானம் பிறவி தோறும் ஒருவனுக்குத் தொடர்ந்து சென்று உதவும்.

"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்புடைத்து"

என்கின்றார் திருவள்ளுவதேவர்.

எழுமையும் என்றால் ஏழு பிறப்பு என்பது பொருளன்று. பிறவி எழுந்தோறும் கலைஞானம் தொடர்ந்து சென்று உதவும். ஆதலால் நீ நல்ல சூழ்நிலையில் ஒரு கலைப்பள்ளியை நிறுவி, பலப்பல ஏழை மாணவர்கட்கு அறிவுப் பசியை யகற்று. கல்விதான் மனிதனுக்குக் கண்.

கண்ணுடையவர் என்பவர் கற்றார். முகத்திரண்டு
புண்ணுடையவர் கல்லாதவர்.

மண்ணும் விண்ணும் கண்ணுடையார்க்கே மகிழ்ச்சி தருகின்றன. எனவே கல்வியாகிய கண்தானஞ் செய்" என்று அரிய பெரிய அறவுரை பகர்ந்தார்.

இத்தனை இதோபதேசங்களும் சுப்பராய முதலியாருடைய செவியிலும் சிந்தையிலும் நுழையவில்லை. செவிடன் காதில் ஊதிய சங்கு போலவும், இல்லிக் குடத்தில் ஊற்றிய தண்ணீர் போலவும் ஆயின.

குருநாதருக்குத் தெரியாமல் ஒரு இளம் பெண்ணைப் பேசிக் கல்யாணஞ் செய்து கொண்டார்.

சுப்பராய முதலியாருடைய மூத்த மனைவி பொன்னம்மாவுக்கு இளையாள் வீட்டில் நுழைவதைப் பார்த்தபோது கண்ணில் பச்சை மிளகாயை அரைத்து விட்டதுபோல் இருந்தது. ...ம்...என்று ஒரு பெருமூச்சு விட்டாள். இளையாள் பேர் அன்னம்மாள்.

அன்னம்மாளைக் காணுந்தோறும் காணுந்தோறும் பொன்னம்மாளுக்கு உடம்பும் உள்ளமும் எரிந்தன. கண்கள் கரிந்தன...நெருப்புப் பொறிகள் சொரிந்தன. எங்கும் காளகூடப் பாம்புகளாகவே தெரிந்தன. கணவன் மீது சீறி விழுந்தாள். ஆலகால விஷம்போல் கொதித்து எழுந்தாள். இளையாளைத் தனது பரம சத்துருவாகப் பார்த்தாள். கோபாக்கினியால் உடம்பு வேர்த்தாள். அவளைத் திட்டித் தீர்த்தாள்.

"மூதேவி! நீ என் வீட்டுக்கு எட்டாமிடத்துச் சனிபோல் எங்கிருந்து வந்தாய். உன்பேர் அன்னமா? அன்னங் கிடைக்காமல் நீ சாகப் போகின்றாய். அல்லது அன்னம் உன் தொண்டையில் இறங்காமல் உனக்குப் புற்றுநோய் வரப் போகின்றது. என் வாழ்வைக் கெடுக்க வந்த வஞ்சகியே! என் நாடி நரம்புகள் யாவும் துடிக்கின்றனவே..."என்றெல்லாம் ஏசினாள். வம்புரைகளைப் பேசினாள்.

இளையவளாகிய அன்னம்மாள் கணவனரது கட்டளைப்படி மூத்தாளின் நிந்தனையுரைகளைப் பொறுத்துக் கொண்டிருந்தாள்.

தேன் பாட்டிலின் மீது மூடியுள்ள கார்க்கு ஒருநாள் திடீர் என்று மேலே கிளம்பிவிடும். அதுபோல் ஒருநாள் இளையாள் கோபத்தில் இளையாள் ஆனாள்.

மூத்தாளாகிய பொன்னம்மாள் இளையாளைப் பார்த்து. "ஏண்டி! உனக்கு வெட்கம் இல்லையா? நான் அநுபவித்த கணவன் தானே இவர். சாப்பிட்ட எச்சிலையில்தான் நீ சாப்பிடுகின்றாய். நாய்க்கும் உனக்கும் என்ன வித்தியாசம்? தரித்திரம் பிடித்தவளே!" என்றாள்.

அன்னம்மாளுக்கு ஆத்திரம் மூண்டது. "வாயை மூடு. உன் அண்டவாயை அடக்கு. என் கணவன் எச்சில் இலையா? உன் வாயைக் கிழித்து அக்கினித் திராவகத்தை வார்ப்பேன். உனக்கு இரும்பம்மாள் என்று பேர் வைத்திருக்க வேணும். தெரியாமல் பொன்னம்மாள் என்று பேர் இட்டு விட்டார்கள். இந்த வீட்டில் உனக்குள்ள உரிமை எனக்கும் உண்டு. வீணே கெட்டுப் போகாதே. ஜாக்கிரதை. உனக்கு ஏன் இத்தனை மமதை. எனக்குக் கோபம் வந்தால் என்ன செய்வேன் தெரியுமா?" என்றாள்.

இப்படி இருவருக்குந் தினம் யுத்த காண்டம் நடைபெற்றது. சுப்பராய முதலியாருக்கு மத்தளம்போல் இரு மனைவியராலும் இடி பட்டார். மேல்மாடியில் இளையாளைக் குடி வைத்தார். ஒருவருக் கொருவர் தொடர்பில்லாமல் செய்தார். இங்கு ஒருநாள் அங்கு ஒரு நாளாக அவர் இருந்து வரலானார். அப்போதும் அவருடைய துன்பம் விட்டபாடில்லை.

மூத்தவள் "ஏன் நீங்கள் இளையாளிடம் அதிக அன்பாக இருக் கின்றீர்கள். அவள் உமக்கு மருந்து வைத்து விட்டாள். வடையில் வைத்தாளா? புட்டில் வைத்தாளா? நான்தானே மூத்தவள். எனக்குத்தான் அதிக உரிமை" என்று வாதஞ் செய்வாள்.

இளையாள், "நீங்கள் ஏன் மூத்தாள் வீட்டுக்குப் போகின்றீர். அவள் உங்களை மருந்து வைத்துக் கொன்று போடுவாள். அவளு டைய உறவையறுத்து விடுங்கள்" என்று விரட்டுவாள்.

அவர் என்ன செய்வார்? பாவம்! இஞ்சியைத் தின்ற மந்தி போல் மிரள மிரள விழித்தார். அப்போதுதான் தன் குருநாதர் சுகவாரியவர்கள்¿ கூறிய அறவுரையின் 'நுட்பந் தெரிந்தது. பெரிய வர் கூறிய மதியைக் கேளாமல் இந்த கதிக்கு ஆளானேமே" என்று கலங்கினார்.

ஒருநாள் அவருடைய பணத்தைக் கவரும் பொருட்டு ஒரு கள்ளன் முகமூடியும் கருஞ் சட்டையுந் தரித்து அந்த வீட்டில் ஒரு வரும் அறியாமல் நுழைந்து ஒளிந்திருந்தான். எலலோரும் தூங்கிய பின் களவு செய்ய அவன் சமயம் பார்த்துக் கொண்டிருந்தான்.

அன்றிரவு மூத்தாளுக்கும் இளையாளுக்கும் கடும் போர் மூண்டது. வாய்ச்சண்டை, கைச்சண்டை, வலுத்தது. பொன்னம் மாள் விறகைத் தூக்கினாள். அன்னம்மாள் வலக்கையில் உலக்கையை எடுத்தாள். இதைப் பார்த்த முதலியார் நடுங்கினார். அடி பாவி களே! உங்களுக்கென்ன கேடு. நான் உழைத்துப் போடுகின்றேன். தின்னுட்டுச் சும்மா இராமல் இப்படி தாடகையும் சூர்ப்பணகையும் மாதிரி சதா போர் புரிகின்றீர்களே. உங்களுக்குப் புத்தியில்லையா? அக்கம் பக்கம் உள்ளவர் சிரிக்கின்றார்களே" என்று கூறித் தடுக்கப் போனார். அவ்வளவுதான். அன்னம்மாள் கணவனுடைய கழுத்தைப் பிடித்து அழுத்தினாள். பொன்னம்மாள் அவரது வயிற்றைப் பிடித்து இடித்தாள். இருவருடைய பிடியிலும் சிக்கி·அவர் விழி பிதுங்கியது. "ஐயோ! ஐயோ" என்று அலறினார். இந்த பரிதாபத்தைக் கண்ட கள்ளன் தன்னை மறந்து வெளிப்பட்டு அவர்கள் கையிலிருந்து அவரை விடுவித்தான். கள்ளனைக் கண்டு மூவரும் அஞ்சினார்கள். 'ஓ' என்று அலறினார்கள். அப்போது தெருவில் காவலுக்கு ரோந்து

வந்த போலீஸ் அதிகாரி உள்ளே நுழைந்து கள்ளனை விலங்கு பூட்டிப் போய் லாக்கப்பில் அடைத்தார்.

முதலியாருக்கு ஒருபுறம் துன்பம். மறுபுறம் இன்பம். மனைவியரது சண்டைக்காக துன்பப்பட்டார். அந்தச் சண்டையால் கள்ளன் களவு செய்ய இயலாது பிடிபட்டதுபற்றி இன்பப்பட்டார்.

மறுநாள் விசாரணை நடைபெற்றது. கள்ளன் அதிகாரி முன் குற்றத்தை ஒப்புக் கொண்டான்.

அதிகாரி அவனுக்கு ஆறு மாதம் கடுங்காவல் தண்டனை விதித்தார். முதலியார் அதிகாரியைத் தொழுதார். ''ஐயா! இவனுக்கு இந்தத் தண்டனை போதியதன்று. பெருந் தண்டனை விதிக்க வேண்டும்'' என்றார்.

அதிகாரி ஓராண்டு சிறைத்தண்டனை யென்றார். முதலியார் அதுவும் போதாது. சிறையில் வேளாவேளைக்குச் சாப்பிட்டுச் சுகமே இருப்பான். ஆதலால் சிறைத்தண்டனை போதியதாகாது. எஜமான் தயவு செய்து இக்கள்ளனுக்கு இரு மனைவியரைக் கல்யாணஞ் செய்து வையுங்கள். அந்த இருதாரங்களால் இவன் தினம் தினம் வேதனையடையட்டும். அதுதான் ஏற்ற தண்டனை'' என்றார்.

அதிகாரி, நல்லது அதுபடியே உமது செலவில் இவனுக்கு இரண்டு தாரங்களைக் கட்டி வைப்போம்'' என்றார்.

கள்ளன் அதிகாரியின் கால்மீது விழுந்து அழுதான்; தொழுதான். ''எஜமானே! உமது பொன்னடிக்குப் பல கோடி வந்தனங்கள். நேற்றிரவு இந்த மனிதன் இரு மனைவியரிடம் பட்ட வேதனையை நான் மறுபிறப்பிலும் மறவேன்.

பல்லவி

எக்காலத்திலும் மறவேன்
இவர்பட்ட இடர்தனையே நான்
எக்காலத்திலும் மறவேன்.

அநுபல்லவி

முக்கால் உயிரை வாங்கி
முன்னும் பின்னும் ஓங்கி
செக்கால் அரைப்பது போல்
செய்த கொடுமைதனை
எக்காலத்திலும் மறவேன்.

என்று நாடக குறிஞ்சி ராகத்தில் நல்ல இனிய குரலால் பாடினன்.

ஆதலால் வேண்டுமாயில் என்னைப் பத்து வருஷம் சிறையில் தள்ளினாலும் தள்ளுங்கள். இருதார வேதனை மட்டும் வேண்டாம். அப்பப்பா! நினைத்தாலே நெஞ்சு வெடித்துவிடும்போல் இருக்கின்றது. இவர் விழி பிதுங்கியதை எண்ணும்போதெல்லாம் உள்ளம் நடுங்குகின்றது. உயிர் ஒடுங்குகின்றது. அந்தத் துன்பத்தை என்னால் பார்த்து சகிக்க முடியாமல்தானே நான் திருடப்போய் ஒளிந்திருந்ததையும் மறந்து இவரைப் பிடிக்கப்போய் நான் பிடிபட்டேன். முதலியார் பட்ட துன்பம் எனக்கல்லவா தெரியும் ஆதலால் தங்களுக்கு விருப்பமிருந்தால் எனக்குத் தூக்குத்தண்டனை போட்டாலும், நான் அதனை ஆறுதலாக ஏற்பேன். உயிர் ஒரு நொடியில் பிரிந்துவிடும். ஐயே! இரு மனைவியரும் சேர்ந்து அப்பளப் பூவாகப் பொறிப்பார்களோ? முதலியார் எப்படித்தான் இந்தத் துயரைத் தாங்கிக் கொள்ளுகின்றாரோ? என்னால் ஒரு கணநேரங்கூட தாங்கிக் கொள்ள முடியாது. முதலியாருடைய பொறுமையின் பெருமை அளவிட முடியாது. இவருடைய பொறுமையைப் பாராட்டிப் பொன்னாடைப் போர்த்தி விழாக் கொண்டாட வேண்டும். யார் யாருக்கோ எது எதுக்கோ பொன்னாடை போர்த்துகின்றார்கள். இவருக்கல்லவா அதைச் செய்ய வேணும். எனவே எஜமான் எனக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் கொடுங்கள். இந்த இருதார தண்டனையைக் கொடுக்க வேண்டாம்'' என்று கெஞ்சினான்.

அதிகாரி கள்ளனுடைய உரைகளினால் முதலியாருடைய துன்பத்தை ஊகித்துக் கொண்டார். கள்ளன் நன்றாகப் பாடுகின்றான். பேச்சுந் திறமையாகப் பேசுகின்றான். இவனுடைய அறிவுந் திறமையாக இருக்கின்றது'' என்று எண்ணினார்.

"கள்வனே! இந்த முறை உன்னை மன்னித்தேன். இனி திருடாதே'' என்று கூறி விடுதலை செய்தார்.

முதலியார் தன் மானம் தவிட்டுக்கும் பெறுமதியில்லாமல் கள்வன் எள்ளி நகையாடுமாறு ஆனதுபற்றி நாணினார். தன் சொத்தில் சிறிது இரு மனைவியருக்கும் ஈந்து அவரவர்கள் தாய் வீட்டுக்கு விரட்டினார். சுகவாரியவர்கள் இதோபதேசப்படி கலைக்கூடத்தை நிறுவினார். வறிய குழந்தைகளைச் சேர்த்து வாழ்வு வழங்கினார். ஆசாபாசங்களையகற்றி ஈசன்பால் நேசம் வைத்தார். கல்விப்பணியில் தன்னையே அர்ப்பணித்துக் கொண்டார். அவருடைய பெருமை எங்கும் பரவியது. அப்பள்ளிக்கு சுகவாரி கலைப்பள்ளி என்று பேர் சூட்டினார். பள்ளி இனிது ஓங்கியது. பல ஏழை மாணவர்கள் இன்புற்றார்கள். அப்பள்ளியில் அக்கள்ளனை அழைத்துக் காவலனாக நியமித்து நல்ல ஊதியங் கொடுத்தார்.

# உலோபம்

மனிதனிடமுள்ள தீய குணங்களில் மிகவும் கொடிய—தலையாய தீக்குணம் உலோபம். ஒருவனிடத்தில் ஆயிரம் நற்குணங்கள் இருந்து, உலோப குணமும் உடன் இருக்குமாயின் அத்தனை நற் குணங்களையும் கீழே அழுத்தி உலோப குணம் மேல் நின்று அவனை உலகம் பழிக்கச் செய்யும்.

தாடகை என்ற கொடிய அரக்கி ஒருத்தியே வளமையான மருத வனம் முழுவதையும் அழித்து விட்டாளாம். அது எது போல்? உலோப குணம் ஒன்றே சகல நற்குணங்களையும் அழிப்பது போலாகும்.

இதனைக் கம்ப நாடர் மிக அழகாகத் தமக்கே உரிய அரிய இனிய தமிழால் கூறுகின்றார்.

உளப்பரும் பிணிப்புறு உலோபம் ஒன்றுமே
அளப்பருங் குணங்களை அழிக்கு மாறுபோல்
கிளப்பருங் கொடுமைய அரக்கி கேடிலா
வளப்பரு மருதவைப் பழித்து மாற்றினாள்.

வானளாவி ஓங்கி வளமையுடன் வளர்ந்துள்ள மூங்கில் காட்டில் நெருப்பு தோன்றி, அவ்வளமை மிக்க மூங்கில் வனத்தை யழிப்பது போல ஒருவனிடத்திலே தோன்றிய உலோபம் அவனை முழுவதும் அழித்துவிடும்.

உலோப குணம் ஒன்றினாலே அடியுடன் அழிந்தவன் துரியோ தனன்.

ஓங்கி உலகளந்த உத்தமன்—கண்ணபிரான் கையேந்தி ஐந்து வீடுகள் மட்டுங் கேட்டார்.

ஆற்றோரமாக வேகாத செங்கல் வைத்து உளுத்துப்போன மூங்கிலை மேலே போட்டு ஓடு வேய்ந்து ஐந்து வீடுகளை அமைத்துத் தந்திருந்தால் அவன் குலத்துடன் அழிந்திருக்க மாட்டான். பாதி ராஜ்யம் தரக் கடமைப்பட்ட அவன் ஐந்து வீடு தந்திருக்கலாந் தானே? அந்த மூடன் உலோப குணத்தால் "ஊசி குத்துகின்ற இட மேனும் தரமாட்டேன்" என்றான். அதனால் அழிந்தான். அவன் மட்டுமா மாண்டான்? ஒரு அக்ஷரோணி சேனை 2,18,700 இரண்டு லட்சத்துப் பதினெண்ணாயிரத்து எழுநூறு வீரர்கள் கொண்டது. இத்தகைய எண்ணிக்கையுடைய பதினொரு அக்ஷரோணி சேனைகளு டனும் உடன் பிறந்த தொண்ணூற்றொன்பது தம்பியருடனும், தன் உறவினருடனும் மாய்ந்தான். என்ன அவலம்? ஐந்து சிறு வீடுகளைத் தந்திருந்தால் இந்த அழிவு அவனுக்கு வந்திராது அல்லவா?

எனவே நற்குணங்கள் எத்தனை எத்தனையிருப்பினும், உலோப குணம் இருப்பின், அத்தனை நற்குணங்களையும் அழுத்தி அவனை அடி யுடன் அழிக்கும்.

நன்கு செந்தமிழைத் தேர்ந்த புலவர் ஒருவர் முத்துநாகப்பன் என்ற பெருந் தனவந்தனிடம் போனார். வந்தவரை "வாரும்; இரும்; உணவு அருந்தும்" என்று கூறாமல், ஒரு குவளைத் தண்ணீரும் தராமல் அந்த உலோபி அவரை அசட்டை செய்தான். உடனே புலவர் பெருமானுக்குச் சீற்றம் பொங்கியது. அவர் மலர் வாயிலிருந்து ஒரு தமிழ்க் கவி வெளி வந்தது. அதுதான் இது.

உரகத்திலே கிடப்பான் சக்ரபாணி உயர்ந்தகும்ப
கரகத்திலே கிடப்பான் குறுமாமுனி கன்னியர்கள்
விரகத்திலே கிடப்பான் காமராசன் மிகுந்தஏழு
நரகத்திலே கிடப்பான் கொழுமூர்முத்து நாகப்பனே.

இனி, ஒருவனிடத்தில் ஆயிரம் ஆயிரம் தீக்குணங்கள் இருந்து, அள்ளி வழங்கும் வள்ளன்மை என்ற ஒரு நற்குணம் இருக்குமாயின், அத்தனை தீக்குணங்களையும் வெளிக் காட்டாமல் தரும குணம் மேலோங்கி நின்று, அவனுக்குப் புகழ் தேடிக் கொடுக்கும். பொன்னையும் பொருளையும் நிலங்களையும் தோட்டங்களையும் வறியார்க்கு வழங்கினார்கள் பலர். பாரி முன்னூறு கிராமங்களைக் கபிலர்க்குத் தந்தான். தன் பொற்றேரை முல்லைக் கொடிக்கு ஈந்தான்.

தனக்கு அன்னியமான பொருள்களைக் கொடுக்க மனம் இசையும். ஆனால் தான் இனிது வளர்த்த உடம்பைத் தர மனம் இசையாது. தன்பால் அடைக்கலம் புக்க கேவலம் ஒரு புறாவுக்காகச் சிபி என்ற வேந்தன் தன் உடலின் தசைகளையறுத்து அறுத்து துலாயில் வைத்துத் தானே அத்துலாயில் ஏறினான். இந்த வள்ளன்மையைக் கண்டு இமையவர் வியந்தனர்.

"எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்ப
புள்ளறு புன்கண் தீர்த்தோன்"

என்று கண்ணகி சிறப்பித்துக் கூறினாள்.

இதனினும் மேலாக ஒருவர் செய்தார். அவரை நாம் எங்கே சிந்திக்கின்றோம்? ஆ! ஆ! எத்துணைப் பெரிய தியாகம்!

அன்புக்கு உறைவிடமான ததீசி முனிவர் அமரர்கட்கு என்புந் தந்து புகழ் பெற்றார்.

ததீசி முனிவர் தன் உடம்பை ஒரு பொருளாக மதித்தாரில்லை. பாலுந் தேனும் பழமும் பாயசமும் வேளை தவறாமல் உண்டு இந்த உடம்பை வளர்க்கின்றோம். விதம் விதமான ஆடைகள். பளபளக்கும் அணிகலன்கள்; எத்தனை அழகு செய்து நிலைக்கண்ணாடியில் கண்டு களிக்கின்றோம். இத்தகைய உடம்பை நம்முடையதென்று நாம் எண்ணுகின்றோம். அதே நேரத்தில் இதனை நாய் நமது என்று கூறுகின்றது; நரி நமது என்று நவில்கின்றது. இயமன் என்னது என்று இயம்புகின்றான். பேயும் நோயும் தமது என்று பேசுகின்றன. ஆதலால் இவ்வுடம்பு யாருக்குச் சொந்தம்?

நாய்நம தெனநரி நமதெனப் பிதா
தாய்நம தெனநமன் தனதெனப்பிணி
பேய்நம தெனமனம் மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே?

"நடுத்தயா விலார்தமை நலியத் துன்பநோய்
அடுத்தயா வருந்திரு அடைய யாக்கையைக்
கொடுத்தயா அறம்புகழ் கொள்வனே எனில்
எடுத்தயாக் கையின்பயன் இதனில் யாவதே."

என்று ததீசி முனிவர் இனிக்கச் சொல்லி உவந்து அன்புடன் என்பை ஈந்தருளினர்.

இதனைத்தான் திருவள்ளுவர்,

"அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு"

என்று கூறியருளினர். இத்திருக்குறளில் ததீசி முனிவர் இமையவர்க்குத் தமது முதுகு எலும்பை வழங்கிய குறிப்புளது. ததீசி முனிவர் தந்த முதுகு எலும்பை இந்திரன் வஜ்ராயுதமாகச் செய்து, அசுரரை வென்று பெரிதுவந்து வாழ்ந்தான்.

கொடைக்குணம் பல தீமைகளை மறைத்துவிடும் என்று முன்னே சிந்தித்தோம். உடம்பிலே உள்ள படை சொறி முதலிய குற்றங் குறைகளை ஒரு பட்டுச்சட்டை மறைத்து விடுமாப்போல், தீமைகள் யாவையும் தரும குணம் மறைத்துவிடும் என்பதற்குச் சான்றாக நின்றவன் கர்ணன்.

கர்ணன் நல்லவன் அல்லன். துரியோதனன் பாண்டவர்களைப் பல கொடுமைகள் செய்தான். பீமனைக் கயிற்றில் கட்டிக் கங்கையில் எறிந்தான். தூங்கும்பொழுது அரவினங்களை ஏவிக் கடிப்பித்தான். உண்ணும் உணவில் நஞ்சு கலந்து கொடுத்தான்; ஆற்றில் கழு நிறைத்துக் குதிக்குமாறு செய்தான்; குடியிருக்கும் வீட்டில் கொள்ளி வைத்தான்; சூது ஆடினன்; மாது நல்லாளை மானபங்கம் புரிந்தான். இத்தனைக் கொடுமைகள் செய்த துரியோதனனை ஒரு முறையேனும் கர்ணன் தடுத்து அறவுரை பகர்ந்தானில்லை. அக்கொடுமைகள் அனைத்துக்கும் உடன் இருந்து உதவி செய்தான்.

அரசவையில் அபலையாக நின்று அழும் யாக பத்தினியைப் பார்த்து, "திரௌபதையே! உன் கணவர்கள் அடிமைகளாகி விட்டார்கள். இங்குள்ள மன்னர்களில் ஒருவனை நீ கணவனாக வரித்துக் கொள்" என்று வாய் கூசாமல் கூறினன்.

எனவே பலப்பல தீக்குணங்கள் நிறைந்த கர்ணனை உலகம் புகழ்கின்றது. என்ன காரணம்? அவன் வரையாது வழங்கினன். பொன்னும் பொருளும் ஈந்து அவன் இரு கரங்களும் சிவந்தன. தன் உயிர்க்கு ஆதாரமாக இருந்த கவச குண்டலங்களை ஈந்தான். ஆதலால் கொடைக்குணம் கர்ணனுடைய தீமைகளை மறைத்து விட்டது.

ஆதலால் பல நற்குணங்களை மறைப்பது உலோபம்.

பல தீக்குணங்களை மறைப்பது ஈகை. எனவே மக்கள் உலோபத்தை விடுத்து ஈகையை மேற்கொண்டு புகழும் புண்ணியமும் பெற்று இகபர நலன்களைப் பெறுவார்களாக.

# மகாபாரதம்

## சாந்தி பருவம்

### ஆபத் தருமம்

(72-ஆம் பக்கத் தொடர்ச்சி)

பொழுது விடிந்தது. பறவை அவனைப் பார்த்து "நண்பரே! நன்றாகத் தூங்கினீரா? உமது விருப்பம் நிறைவேறட்டும். இங்கிருந்து மூன்று யோசனை தூரத்தில அரக்கர்களின் அதிபன் விருபாட்சன் என்ற அரிய நண்பன் இருக்கின்றான். நீர் அவனிடம் போய் நான் அனுப்பியதாகச் சொல்லும். அவன் உமக்கு அளவற்ற பொன்னைத் தருவான். வறுமையாகிய சிறுமை தீர்ந்து வாழும்" என்று கூறியது.

கௌதமன் புறப்பட்டான். வழியில் அமுதம் போன்ற பழங்களைத் தின்று கொண்டு, குளிர்ந்த மரநிழலில் நடந்து, மூன்று யோசனை கடந்து மநுவிரஜம் என்ற நகரத்தை யடைந்தான்.

தோரணங்களும் வாரணங்களும் அங்கு நிறைந்திருந்தன. பளிங்கு மேடைகளும், தாமரை ஓடைகளும் காட்சியளித்தன. மநு விரஜத்தை யரசு புரியும் விருபாட்சனைப் பிராம்மணன் சந்தித்தான். நாடீசங்கன் என்ற பறவை யரசன் உன்பால் என்னை அன்பால் அனுப்பினான் என்று கூறினான்.

விருபாட்சன் நண்பனால் அனுப்பப்பட்ட அவனை அன்னைபோல் விரும்பி நல்வரவு கூறி இனிது உபசரித்தான். "ஐயா! நீர் சிறந்த அந்தணராகக் காணப்படுகின்றீர்! வேதவாக்கியங்களையும் வேத சாகைகளையும் உம்பால் கேட்க விரும்புகிறேன்" என்றான்.

அவன் ஒன்றுங் கூறமாட்டாமல் மிரளமிரள விழித்தான். சாத்திரமறியாத அவன் கோத்திரத்தை மட்டும் கூறினான். அவன் முகத்தில் அசடு வழிந்தது. நான் கௌதம கோத்திரத்தில் வந்தவன். நான் வேடர் சேரியில் வாழ்கின்றேன். இரண்டாந்தாரமாகத் திருடன் மகளை மணந்துகொண்டேன்" என்றான்.

விருபாட்சன் சிந்திக்கலானான். நடை தவறிய இவனை நமது நண்பனாகிய நாடீசங்கன் எப்படி நட்பு கொண்டான். அப்பறவை யரசன் உத்தமமானவன். பிறருடைய குணங்குற்றங்களைப் பார்க்காத பண்புள்ளவன். எனக்கு அரிய பிரிய நண்பன் இவனுக்குப் பொன் கொடுப்பது நல்லதன்று. பாத்திரம் அறிந்தல்லவா தர வேண்டும். இவன் தக்க பாத்திரம் அலன். ஆனால் காசிபருடைய புதல்வனும் உத்தம குணங்கட்கு உறைவிடமானவனும், என் உடன் பிறந்தானைப் போன்றவனுமான ராஜதர்மா என்ற பறவையனுப்பியதால் நாம் குணம் குற்றம பாராமல் இவனுக்கு உதவவேண்டியது" என்று எண்ணி முடிவு செய்தான்.

"பிராம்மணனே! நாளை கார்த்திகைப் பௌர்ணமி. ஆயிரம் அந்தணர்கள் இங்கு வந்து என்னிடம் பரிசு பெறுவார்கள். நீயும் அவர்களுடன் சேர்ந்து என்னிடம் பரிசில் பெறுவாயாக" என்றான்.

மறுநாள் ஆயிரம் அந்தணர்கள் அங்கு வந்தார்கள். எல்லாம் வேதத்தை விதிப்படிக் கற்றறிந்தவர்கள். கௌதமனையும் வந்த அந்த அந்தணர்களையும் அசுர வேந்தன் விதிப்படி தர்ப்பாசனங்களில் இருத்தினான். தங்கப் பாத்திரங்களில் அன்னம் நெய் தேன் முதலிய உணவுகளைக் கொடுத்து உபசரித்தான். அந்தணர்கட்குத் தட்சிணையாகத் தங்கம் வெள்ளி, முத்து, பவளம், வைரம், வைடூரியம் முதலிய இரத்தினங்களையும், கம்பளம் போர்வை பட்டு முதலியவைகளையும் நிரம்பக் கொடுத்தான். "அந்தணர்களே! என்னை ஆசீர்வதியுங்கள். அவரவர்கள் உண்ட அந்தந்தத் தங்கப் பாத்திரங்களை அவரவர்களே எடுத்துக் கொள்ளுங்கள்" என்றான். அந்தணர்கள் வேதமந்திரங்களால் ஆசீர்வதித்து வந்த வழியே இரத்தினக் குவியலை எடுத்துக் கொண்டு சென்றார்கள்.

கௌதமனும் இரத்தினம், பொருள் சுமையைச் சுமந்துகொண்டு மிகுந்த மகிழ்ச்சியுடன் விருபாட்சனிடம் விடைபெற்று ஆசிரமத்தையடைந்தான். நாடீசங்கன் என்ற பறவை மிகுந்த அன்புடன் அவனை வரவேற்று, கனிகளைத் தந்து பசியாறச் செய்து, சிறகுகளினால் விசிறி இளைப்பாற்றியது. அவன் போய்வந்த செய்தியையும், தனது நண்பன் வழங்கிய பரிசில் பொருள்களையும் பார்த்து உவகையுற்றது. சிறிது நேரம் உரையாடிய பின் கொக்கு உறங்கிவிட்டது.

கௌதமன் சிந்திக்கலானான்; மிகப் பெரிய தனங்களை நான் பெற்றேன். நாளை நாம் நடந்து செல்லும் வழியுந் தூரமாகவுள்ளது. வழியில் உணவு ஒன்றுங் கிடைக்காது. ஆதலால் இந்தக் கொக்கைக் கொன்று இதை எடுத்துக்கொண்டு போனால் வழியில் பசியாற அனுகூலமாகும். இதன் உடம்பு நிரம்பத் தசையுடன் கூடியது" என்று அப்பாதகன் நினைத்தான். நன்றிகெட்ட அவன் அருகில் எரிந்து கொண்டிருக்கும் கொள்ளிக்கட்டையை எடுத்து, நம்பிக்கையுடன் அருகில் உறங்கிக் கொண்டிருக்கும் நற்குணம் படைத்த பறவையைக் கொன்றுவிட்டான். பறவையின் சிறகையும் உரோமங்களை தீயில் எரித்து அதன் உடம்பைப் பக்குவமாகத் தீயில் வாட்டிக் கொண்டான்.

அதிகாலையில் தனங்களையும் கொக்கின் உடம்பையுந் தூக்கிக் கொண்டு தன் ஊரை நோக்கிப் புறப்பட்டான்.

காலையில் தனது நண்பனான நாடீசங்கன் பிரமலோகம் போகும் போது விருபாட்சனைக் கண்டுவிட்டுச் செல்லும். வழக்கம்போல் நண்பன் வராமையால் அவன் கலக்கமுற்றான். புதல்வனை நோக்கி "உத்தமமான என் நண்பன் இன்று வரவில்லை. அது என்னைப் பார்த்து இரண்டு தினங்கள் ஆயின. வேதம் ஓதாத கௌதமன் அங்கு சென்றான். என் மனதில் சந்தேகம் உண்டாகின்றது. ஒரு வேளை அவன் கொன்றிருக்கக் கூடும். அவன் தீய சிந்தையுள்ளவன் என்று நான் அறிகின்றேன். நீ சென்று ராஜதர்மன் என்ற பட்சி

சுகமாக இருக்கின்றதா? கொல்லப்பட்டதா? அறிந்துவா'' என்று கட்டளையிட்டான்.

விரூபாட்சனுடைய மகன் அசுரர்களோடு வாயுவேகமாகச் சென்முன். ஆலமரத்தடியில் கொக்கின் உரோமங்கள் தீயில் எரிந்து சிந்தியிருப்பதைப் பார்த்தான். கண்கள் சிவந்து, சீற்றம் அடைந்து, அதன் சிறகுகளைக் கொண்டுபோய் விரூபாட்சன் முன்வைத்து அழுதான். பறவையின் மரணத்தை யறிந்து மன்னவனும் மன்னவன் மனைவியும் மந்திரிகளும் அழுதார்கள்.

விரூபாட்சன் நன்றி கொன்ற அப்பாதகனைப் பிடித்துக் கொல்லுங்கள். ஆனால் அவனுடைய மாமிசத்தை நாம் புசித்தால் நமக்குப் பாவம் வரும். தீயவனுடைய மாமிசந் தின்னத் தக்கதன்று'' என்முன்.

அசுரக் கூட்டம் கொதித்து எழுந்தது. ''அவனைப் பிடியுங்கள்; அடியுங்கள்; அழியுங்கள்; எரியுங்கள்'' என்முர்கள். விரைந்து சென்று கௌதமனைப் பிடித்துக் கொன்று துண்டு துண்டாக வெட்டி நாய்களுக்கு முன் போட்டார்கள். அப் பாவியின் மாமிசத்தை நாய்களும் தின்ன மறுத்துவிட்டன. நல்லோர் பொருளைக் கவர்ந்தவனுக்கும், குருவின் மனைவியை விரும்பியவனுக்கும் பிராயசித்தம் உண்டு. நன்றி கொன்றவனுக்குப் பிராயசித்தம் இல்லை. நன்றி கொன்ற அப் பாதகன் நரகத்தை யடைந்தான்.

விரூபாட்சன் கொக்கை சந்தனக்கட்டை யடுக்கி விதிப்படி தகனஞ்செய்தான். இந்திரன் அமிர்தத்தால் அதன் உடம்பை நனைத்தான். கொக்கு உயிர்பெற்று எழுந்தது.

எழுந்த அப்பறவை ''கௌதமன் என்ற அந்த நண்பன் எங்கே? அவனை ஒன்றும் இடர் செய்யாதீர்கள்'' என்று கூறியது.

இந்திரன் ''விரூபாட்சனே! இந்த நாடீசங்கன் முன்னொரு காலத்தில் பிரமதேவருடைய சபைக்குக் குறித்த காலத்தில் வராமையால் கொக்காக மாறுமாறும், பிரமஞானத்துடன் இருக்குமாறும், நன்றி கெட்ட கௌதமனால் மரணத்தை யடைந்து நம்மிடம் வருவாய் என்றும்சாபமும், சாப விடுதலையும் பிரமதேவர் தந்தருளினர். நாடீசங்கன் பிரமலோகம் சென்முன்.

ஆதலால் தருமனே! பிராம்மணவாதம், திருடு, கள் குடித்தல் கொலை புலை முதலிய எல்லா பாவங்களுக்குங் கழுவாய் உண்டு. நன்றி கொன்ற பெரும் பாவத்துக்கு மட்டுங் கழுவாயில்லை. எனவே நன்றி கொன்றவனுடைய நட்பு கூடாது. நல்லாருடன் நட்பு கொள்ளவேண்டும்'' என்று கூறி முடித்தார். யுதிட்டிரர் இதனைக் கேட்டு மகிழ்ச்சி யடைந்தார்.

ஆபத்தருமம் முற்றிற்று

## எமது வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. | 6—00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | ரூ. | 3—00 |
| 3. | திருப்புகழ்த்திரட்டு | ரூ. | 1—00 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற் படைவீடு திருப்பரங்குன்றம் பாடல்களும்) | ரூ. | 2—25 |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | ரூ. | 5—00 |
| 6. | திருப்புகழ் விரிவுரை—மூன்றுவது தொகுதி (மூன்றுவது படைவீடு—பழநி) | ரூ. | 5—00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலே) | ரூ. | 2—50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி முதற்பாகம் குன்றுதோருடல் | ரூ | 5—00 |
| 9. | மகாபாரதம் வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது | ரூ. | 4—00 |
| 10. | கந்தரநுபூதி (விரிவுரையுடன்) | ரூ. | 2—00 |
| 11. | அறிவுரை யமுது | ரூ. | 0—50 |
| 12. | திருவாசகத்தேன் | ரூ | 0—50 |
| 13. | செந்தமிழ் இன்பம் | ரூ. | 0—50 |
| 14. | சிந்தனைத்தேன் | ரூ. | 0—50 |
| 15. | கிழவியும் குழவியும் | ரூ. | 0—50 |
| 16. | அபிராமி | ரூ. | 1—00 |
| 17. | அநசூயை | ரூ. | 1—00 |

---